வேண்டினர். அதனை மறுத்துப், பிள்ளையார், "நீர் பெற்ற பெண் விடத்தினால் வீந்த பின்னர் யான், இறைவரது கருணை காண்வர, மீள உற்பவிப்பித்ததால் நீர் சொல்வது தகாது" என்றருளவே, வருந்தி யரற்றிய வணிகரும் கிளைஞரும் தெளிய வேதநூற் றுணிபினை அருளி அவர்களைத் தேற்றியருளினர். அவர்களும் அவ்விருப்பத்தினை யொழிந்தனர். பிள்ளையார் திருக்கோயிலுட் சென்று கருணை செய்து கைதந்த இறைவரை வணங்கிப் போந்தருளினர். சிவநேசர் பாவையாரது மணத்தினை ஏனையோருக்கு இசைகிலேன் என்று அவரைக் கொண்டு, கன்னிமாடத்துட் சேர்த்தனர். பாவையாரும் சிவத்தை யடைந்தனர். பிள்ளையார் சில நாள் அப்பதியில் எழுந்தருளியிருந்து பதியவர்கள் விடைகொள்ளச், சிவநேசரது வருத்தந் தீர மதுர மொழியளித்து விடை கொடுத்துச் சென்று, திருவான்மியூர் சேர்ந்து, பிறவிமருந்தாகிய இறைவரை வணங்கி, வினாவுரையாகிய பதிகத்தினாற் றுதித்து, அங்குச் சிலநாள் இனிது அமர்ந்தருளினர்.

---

## கற்பனை

(1) செல்வப் பெருக்கமுடையார் தம்மை உள்ளபடி அறிந்தாராயின், அச் செல்வ முதலிய பாசப் பெருக்கங்களின் மயங்கி அவற்றுக்கே யடிமையா யொழியாது, சங்கரற் கடிமையே செய்து மெய்ப்பொரு ளுணர்ந் தொழுகுவர் (2933).

(2) சிவனடியார்களது கூட்டத்தில் மனமுருகுதலும், சைவ நெறியைப் புறம் பேசி இடையூறு விளைக்கும் பரசமயங்களில் வெறுப்பும் உடைமையும், சிவனடிமைத் திறத்தி னிற்போர் செயல்களாம் (2934).

(3) தமது செல்வங்களையும் உடைமைகளையும் சிவனடியார்க்கும் சிவஞானிகள்பாலும் ஆக்குதல் அன்பின் மேலீட்டினா லாவது (2936).

(4) நன்மகப்பே றில்லாத மனைவாழ்க்கை வருத்தந் தருவது (2939).

(5) சிவஞானிகளின் அருட்டிறங்களைத் தாம் பரவுதலும், பிறர் சொல்லக் கேட்பதில் விருப்புறுதலும் சிவன் அடிமைப் பண்புகளிற் சிறப்புடையவை (2937).

(6) சிவனை நோக்கிச் செய்யும் தவத்தாலும் அடியார் பூசையினாலும் நன்மகப் பேறுண்டாகும் (2939).

(7) உருவும் திருவும் முதலிய காரணங்களால் மகவுக்குப் பொருந்தும் பெயரிடுதல் மரபு (2943).

(8) ஆளுடைய பிள்ளையாரது அருட்பெருந் திறத்தினைக் கேட்டுத் திளைத்த வணிகராகிய சிவநேசர், தமது மகளையும் செல்வ முழுவதினையும் அவரே உடையவர் என்று உறுதி மொழிந்தார். இஃது அன்பின் பெருக்காலாகியது (2952 - 2953). இவ்வாறே திருநாட்டியத்தான்குடியில் வேளாளர் கோட்புலியார், தமது மக்களிருவரையும் ஆளுடைய நம்பிகளுக்கு அடிமையாக் கொள்ள அளித்ததுவும் அன்பின் செயல். இவ்வாறு வருவன உலகியலிறந்த அன்பு வயப்பட்ட சிறப்பியலாகிய செயல்களாவன வன்றிப் படியெடுத் தொழுகும், மறைவிதியில் வரும், உலகியலொழுக்கமாகா. ஆளுடைய நம்பிகள் வேளாளர் மகளாராகிய சங்கிலியாரை மணந்தது பண்டைவிதி கடைகூட்ட நிகழ்ந்த செயலாம். இவைபோல்வன கொண்டு மறைவிதி வரும் நமது முன்னையோரது சமூக நிலைகளைக் குலைக்கும் வழிதேடும் இந்நாட் சீர்திருத்தக்கார மாக்கள் செயல் பொருந்தா என்பது. இக்கருத்துப்பற்றியே பின்னர்ப் பிள்ளையார் வேதநூற் றுணிவினை அருள்செய்து சிவநேசரையும் கிளைஞர்களையும் தேற்றுவித்தருளினர்.

(9) விதிவயத்தாலும், பின்னர் அருள்வயத்தாற் றீரவுள்ள நிலையாலும் வரும் நோய்கள் மந்திர முயற்சிகளாற் றீர்வுபெறு (2961).

(10) தமது மகளாரைப் பிள்ளையாருக்கு அளிக்க உறுதிகொண்ட சிவநேசர் அஃதியலாதவாறு அவளிறந்துபட, அவளது உடலைத் தீயிலிட்டுச், சாம்பலையும் எலும்பையும் குடத்திலிட்டு, அதனை அவளாகவே ஐந்தாண்டுகள் போற்றிவந்து, பின்னர்ப் பிள்ளையார் வர நேர்ந்தபோது அக்குடத்தையே அவர்பால் ஒப்படைத்தனர்; இஃது உலகிறந்த நிலையின் நிகழும் திண்ணிய அன்பின் திறம்.

(11) உருவங் காணாமலே உறைத்த அன்பினால் பெரியோரை வழிபட்டு வரின் அப் பெரியோர் ஒருநாள் தாமாகவே வந்து அருள்கொடுப்பர் என்பது திண்ணம். இஃது உறைத்த தியானத்தின் பயன். அப்பூதியார் அரசுகளை வழிபட்ட நிலையிலும் இவ்வுண்மை காண்க. ஞான நூல்களுட் கூறும் சிவத் தியானப் பயன் வருதலும் இவ்வாறேயாம்.

(12) இவ்வுலகத்துள் நின்று இறந்துசென்ற உயிரை நன்னெறிப்படுத்தற்கு அது வாழ்ந்த உடலின் எலும்பினை வைத்துச் சடங்கு செய்ய, அப்பயன், அவ்வுயிரைச் சாரும் என்ற உண்மையினை நிறுவிக்காட்டப், பிள்ளையார், குடத்துள் நின்ற எலும்பினை நோக்கி அவ் வெலும்புக்கூட்டினைக் கொண்ட உடலினுள் முன்வாழ்ந்த உயிராகிய பூம்பாவையாரின் பெயர் சொல்லி அழைத்துப் பாடியருளினர். இவ்வுண்மை உலகம் தெளிந் தறிதற்பாலது (2984).

(13) மண்ணினிற் பிறந்தார் பெறும் பயன், சிவனடியார்களை அமுது செய்வித்தலும் சிவனது நல்விழாப் பொலிவுகண் டார்தலுமேயாம் என்பது வேத சிவாகமங்களிற் றுணிந்த உண்மை (2985).

(14) முன் கூறிய அவ்வுண்மையினையே சூளுறவாகக் கூறி, இஃது உண்மையாயின் "உலகர்முன் வருக" எனப் பிள்ளையார் அழைக்கப், பூம்பாவை, கழிந்த ஆண்டுகளின் வளர்ச்சியுடன் வந்தனள். இஃது அவ்வுண்மைகளின் உறுதியைக் காட்டுவதாகும் (2985).

(15) சிவஞானிகளது அருட்டிருவாக்கே அமுதமாகிப் புகுந்து உயிரற்ற எலும்பினுள்ளும் உயிரை வருவிக்கும் (2986).

(16) இறைவர் அருளினாலே பிள்ளையார் திருவாக்கின்படி எழுந்த பூம்பாவை எல்லையில்லாப் பேரழகுடன் விளங்கினாள். இது பிரமன் படைப்பில் வாராத சிவனருட் படைப்பின் இயல்பு; அப் பேரழகினுள்ளே சிவனது கருணை வெள்ளத்தினையே ஆயிர முகத்தானும் பிள்ளையார் காணலாயினர் (3007).

(17) பிரமன் படைப்பினுள் வரும் அழகுகள் எல்லாம் அழியும் தன்மையுடையன; சிவன் அருட்படைப்பின் அழகு என்றும் மாறாத பெருவளத்தன (3007).